

श्रीशङ्करभगवत्पादानुगृहीता

# ॥ नवरत्नमाला ॥

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அருளிய

# நவரத்ன மாலா



ஸ்ரீ காமகோடி க்ரந்தாவலி : 55

श्रीशङ्करभगवत्पादानुगृहीता

# ॥ नवरत्नमाला ॥

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அருளிய

# நவரத்ன மாலா

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான
**ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ**
**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடன்
கூடியது

ஸ்ரீ ராம ஜயம்
[illegible]
[illegible]



**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**
**4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1.**



ஸ்ரீ தேவி காமாக்ஷி



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான
ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

श्रीः

मुद्रा

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छङ्करभगवत्पादप्रतिष्ठित-श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद्गुरु श्रीपादैः क्रियते नारायणस्मृतिः ॥

श्रीमूकपञ्चशती-मुकुन्दमाला-शिवपादादिकेशान्तवर्णनादीन् गरिष्ठान् ग्रन्थविशेषान् द्राविडचनुवादैः साकं प्रकाशयित्वा आस्तिकानां भक्तिभावमभिवर्धयद्भिः अस्मत्प्रियान्तेवासिभिः श्रीकामकोटिकोशस्थाननिर्वाहकैः अद्य श्रीभगवत्पादादिमहनीयैः सर्वजनोद्धारणार्थमनुगृहीताः भगवन्मूर्तिप्रभेदगुणवर्णनपटीयांसः भक्तिरससर्वस्वभूताः श्रीहनूमत्पञ्चरत्न-सुब्रह्मण्यभुजङ्गादिस्तोत्रतल्लजाः द्राविडचनुवादैः साकं प्रकाशयिष्यन्त इति विदित्वा परमां मुदं भजामः ।

आस्तिकाः एतानि स्तुतिरत्नानि सार्थानुसन्धानं पठन्तः शृण्वन्तश्च भगवद्भक्तिपरवशीकृतस्वान्ताः श्रीचन्द्रमौलीश्वरकृपापात्रीभूताः सकलभाग्यजातं प्राप्नुवन्त्वित्याशास्महे ।

यात्रास्थानम्
इलैयात्तकुटी
शुभकृच्छ्रावणशुद्धप्रथमा

नारायणस्मृतिः ।

ஸ்ரீ :




**ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய**
**ஸ்ரீமத் சங்கரபகவத்பாத ப்ரதிஷ்டித**
**ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு**
**ஸ்ரீபாதை: க்ரியதே நாராயண ஸ்ம்ருதி: ||**

ஸ்ரீ மூகபஞ்சசதீ - முகுந்தமாலா - சிவபாதாதி கேசாந்தவர்ணனம் முதலிய அரும்பெரும் நூல்களைத் தமிழுரையுடன் வெளியிட்டு ஆஸ்திகர்களின் பக்தி உணர்ச்சியை வளர்க்கும் நம் பிரிய சிஷ்யரான ஸ்ரீ காமகோடி கோசஸ்தான நிர்வாஹகர்கள், இப்பொழுது ஸ்ரீ பகவத்பாதர்கள் முதலிய பெரியோர்கள் அருளிய பக்திமயமான ஸ்தோத்திரங்களைத் தமிழுரையுடன் வெளியிடுவதை அறிந்து மிகவும் சந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இந்த ஸ்தோத்திர ரத்தினங்களைப் பொருளறிந்து படித்தும் கேட்டும், பகவத் பக்தியில் திளைத்த உள்ளத்தினராய், ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரரின் கிருபைக்குப் பாத்திரராகி, ஸகல பாக்கியங்களையும் பெறுவார்களாக.

| | | |
|---|---|---|
| யாத்ராஸ்தானம்<br>இளையாத்தகுடி<br>சுபக்ருத் ச்ராவண<br>சுத்தப்ரதமா | } | **நாராயண ஸ்ம்ருதி:** |



ஸ்ரீ சங்கர பகவத் பாதர்

|| श्रीः ||

# || नवरत्नमाला ||

## நவரத்ன மாலா



ओंकारपञ्जरशुकी-मुपनिषदुद्यानकेलिकलकण्ठीम् ।
आगमविपिनमयूरी-मार्यामन्तर्विभावये गौरीम् ॥ १ ॥

ஓங்காரபஞ்ஜரசுகீம்
உபநிஷதுத்யாநகேலிகலகண்டீம் ।
ஆகமவிபிநமயூரீம்
ஆர்யாமந்தர் விபாவயே கௌரீம் ॥ 1

ओंकार - ப்ரணவமென்ற, पञ्जर - கூட்டிலுள்ள, शुकीं கிளியும், उपनिषत् - வேதாந்தங்களாகிற, उद्यान - தோட்டத்தில், केलिकलकण्ठीं - விளையாடும் குயிலும், आगम - வேதங்களாகிற, विपिन - காட்டில் உள்ள, मयूरीं - பெண் மயிலுமான, आर्यां - மதிக்கத் தகுந்த, गौरीं - பார்வதியை (ஆர்யாம்பாளை), अन्तः - உள்ளே (மனத்தில்), विभावये - நன்கு தியானிக்கிறேன்.

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम् ।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातृकां वन्दे ॥ २ ॥

தயமாநதீர்க்கநயநாம்
தேசிகரூபேண தர்சிதாப்யுதயாம் ।
வாமகுசநிஹிதவீணாம்
வரதாம் ஸங்கீதமாத்ருகாம் வந்தே ॥ 2

**दयमान** - தயைபுரிகின்ற, **दीर्घ**-நீண்ட, **नयनां**-கண்களையுடையவளும், **देशिकरूपेण** – ஆசார்யன் உருவத்துடன், **दर्शित** - காட்டப்பட்ட, **अभ्युदयां** - மேன்மையுடையவளும் (ஆசார்யனாக வந்து ஆத்மஸ்வரூபத்தைக்காணச் செய்கின்றவளும்), **वामकुच** - இடது ஸ்தனத்தில், **निहित** - வைத்துக்கொள்ளப்பட்ட, **वीणां** - வீணையை உடையவளும் (இடது ஸ்தனத்தில் படும்படி வாசிக்குங் காலத்தில் வீணையைச் சார்த்திக் கொண்டிருப்பவளும்), **वरदां**-விரும்பியதை அளிப்பவளுமான **सङ्गीतमातृकां** - ஸங்கீதத்திற்கு மூலகாரணமாக இருப்பவளை நமஸ்கரிக்கிறேன்.

**श्यामलिमसौकुमार्यां सौन्दर्यानन्दसम्पदुन्मेषाम् ।**
**तरुणिमकरुणापूरां मदजलकल्लोललोचनां वन्दे ॥ ३ ॥**

ச்யாமலிமஸௌகுமார்யாம்
ஸௌந்தர்யாநந்த ஸம்பதுந்மேஷாம் ।
தருணிமகருணாபூராம்
மதஜலகல்லோலலோசநாம் வந்தே ॥ 3

**श्यामलिमसौकुमार्यां** - கருமை நிறத்தின் அழகாக விளங்குபவளும், அல்லது கரிய நிறமும் மென்மையுமுடையவளும், **सौन्दर्यानन्दसम्पदुन्मेषां**-அழகு ஆனந்தம் இவைகளின் சிறப்பின் தோற்றமுள்ளவளும், **तरुणिमकरुणापूरां**-முற்றிய கருணை ப்ரவாஹம் அல்லது யௌவனம், தயை இவைகளின் பெருக்கு உடையவளும், **मदजलकल्लोललोचनां** – மதஜலத்தின் அலைகள் போன்ற கண்கள் உள்ளவளும் (மதஜலத்தைக் கறுப்பாகக் கூறுவதுண்டு.) அல்லது, மதத்தால் நீரலை போன்ற (அசைவுள்ள) கண்களையுடையவளும்,

அல்லது மதஜலப் பிரவாகத்தையுடைய கண்களை யுள்ளவளுமான தேவியை, वन्दे - நமஸ்கரிக்கிறேன்.

குறிப்பு: ஸௌந்தர்யமுள்ள இடத்தில் ஆனந்த ஸம்பத்து இராது. ஆனந்த ஸம்பத்துள்ளவரிடம் ஸௌந்தர்யம் இராது. அம்பிகையிடம் இரண்டும் சேர்ந்திருப்பது விசேஷமாகும்.

श्यामतनुसौकुमार्यां என்றும் பாடாந்தரம். கரிய நிறத்தோடு கூடிய தேக மென்மையை (அழகை) உடையவளும் என்பது பொருள். सौन्दर्यमन्दसंपदुन्मेषां என்றும் பாட முண்டு.

**नखमुखमुखरितवीणा-नादरसास्वादनवनवोल्लासम् ।**
**मुखमम्ब ! मोदयतु मां मुक्ताताटङ्कमुग्धहसितं ते ॥ ४ ॥**

நகமுகமுகரிதவீணா-
நாதரஸாஸ்வாதநவநவோல்லாஸம் |
முகமம்ப! மோதயது மாம்
முக்தாதாடங்கமுக்தஹஸிதம் தே || 4

नखमुख - நகங்களின் நுனிகளால், मुखरित - சப்த முள்ளதாகச் செய்யப்பட்ட (வாசிக்கப்பட்ட), वीणा - வீணையின், नाद - சப்தத்தின், रस - சுவையை, आस्वाद - சுவைப்பதில், नवनव - புதிது புதிதான, उल्लासं - அழகையுடையதும், मुक्ताताटङ्क - முத்துக்களோடு கூடிய காதாபரணத்தினால், मुग्ध - அழகிய, हसितं - மந்த ஹாஸத்தை யுடையதுமான, ते - உனது, मुखं - முகம், मां - என்னை, अम्ब ! - தாயே! मोदयतु - களிப்புறச் செய்யவேண்டும்.

सरिगमपधनिरतां तां वीणासंक्रान्त-कान्तहस्तान्ताम् ।
शान्तां मृदुलस्वान्तां कुचभरतान्तां नमामि शिवकान्ताम् ॥

ஸரிகமபதநிரதாம் தாம்
வீணாஸங்க்ராந்த-காந்தஹஸ்தாந்தாம் ।
சாந்தாம் ம்ருதுலஸ்வாந்தாம்
குசபரதாந்தாம் நமாமி சிவகாந்தாம் ॥ 5

**सरिगमपधनि**-ஸ, ரி, க, ம, ப, த, நி என்ற ஸ்வரங்களில், **रतां**-ஈடுபட்டவளும், **वीणा**-வீணையில், **संक्रान्त**-பரவிய, **कान्त** - அழகிய, **हस्तान्तां** - கையின் நுனிகளை (விரல்களை) உடையவளும், **शान्तां** - அமைதியுள்ளவளும், **मृदुलस्वान्तां**-இளகிய மனமுள்ளவளும், **कुचभरतान्तां**-ஸ்தனங்களின் பளுவால் சிரமமடைந்தவளுமான, **तां**-அந்த, **शिवकान्तां** - பரமசிவனது மனைவியை, **नमामि** - வணங்குகிறேன்.

अवटुतटघटितचूली-ताडिततालीपलाशताटङ्काम् ।
वीणावादनवेला-कम्पितशिरसं नमामि मातङ्गीम् ॥ ६ ॥

அவடுதடகடிதசூலீ-தாடிததாலீபலாசதாடங்காம் ।
வீணாவாதநவேலா-கம்பிதசிரஸம் நமாமி மாதங்கீம் ॥ 6

**अवटुतट** - பின் கழுத்தில், **घटित** - சேர்ந்திருக்கிற, **चूली**-குழல் கற்றையால் (கூந்தல் முடிப்பால்), **ताडित** - தட்டப்பட்ட (மோதப்பட்ட), **तालीपलाशताटङ्काम्** - பனையோலையாலான கர்ணாபரணத்தை உடையவளும், **वीणावादनवेला** - வீணை வாசிக்கும் சமயத்தில், **कम्पितशिरसं** - தலையை அசைப்பவளுமான, **मातङ्गीं** - மதங்க முனிவரின் குமாரியான தேவியை, **नमामि** - நமஸ்கரிக்கிறேன்.

குறிப்பு: வீணை வாசிக்கும் நேரத்தில் தலையை அசைப்பதால் பின்புறமிருக்கும் தலைமுடி காதிலுள்ள ஓலையில் படவே அதுவும் அசைகின்றது என்பது பொருள்.

वीणारवानुषङ्गं विकचमुखाम्भोजमाधुरीभृङ्गम् ।
करुणापूरतरङ्गं कलये मातङ्गकन्यकापाङ्गम् ॥ ७ ॥

வீணாரவாநுஷங்கம் விகசமுகாம்போஜ-மாதுரீப்ருங்கம் ।
கருணாபூரதரங்கம் கலயே மாதங்ககந்யகாபாங்கம் ॥ 7

**वीणारवानुषङ्ग**-வீணாநாதத்தைத் தொடர்கின்றதும், **विकच** - மலர்ந்த, **मुखाम्भोज** - முகமாகிய தாமரையின், **माधुरी** — இனிமையை அநுபவிக்கும், **भृङ्ग** - வண்டும், **करुणापूरतरङ्ग** - கருணை வெள்ளத்திலுண்டாகும் அலையுமாகிய, **मातङ्गकन्यकापाङ्ग** - மாதங்க கன்னிகையின் கடாக்ஷத்தை, **कलये** - தியானிக்கிறேன்.

**विकचमुखामोद** என்றும் பாடமுண்டு. **मुखामोद** என்றால், "முகத்தின் வாஸனையின்" என்று பொருள்.

मणिभङ्गमेचकाङ्गीं मातङ्गीं नौमि सिद्धमातङ्गीम् ।
यौवनवनसारङ्गीं सङ्गीताम्भोरुहानुभवभृङ्गीम् ॥ ८ ॥

மணிபங்கமேசகாங்கீம்
மாதங்கீம் நௌமி ஸித்தமாதங்கீம் ।
யௌவநவந ஸாரங்கீம்
ஸங்கீதாம்போருஹாநுபவப்ருங்கீம் ॥ 8

**मणिभङ्ग** - பட்டைபிடித்த இந்திர நீலமணிபோல், **मेचक** - நீலமான, **अङ्गी** - திருமேனியை உடையவளும் (அல்லது, இந்திர நீலமணியை அவமதிக்கும் கரிய

தேகமுடையவளும்), सिद्धमातङ्गी-மாதங்க முனிவருக்கு ஸித்தியை அளித்தவளும், यौवनवन-வாலிபப் பருவ மாகிய காட்டில் (விளங்கும்), सारङ्गी - பெண் மானும், सङ्गीत - சங்கீதமாகிற, अम्भोरुह - தாமரையை (மகரந் தத்தை), अनुभव - அநுபவிக்கின்ற, भृङ्गी - பெண்வண்டு மாகிய, मातङ्गी-மாதங்கி தேவியை, नौमि-துதிக்கிறேன்.

मेचकमासेचनकं मिथ्यादृष्टान्तमध्यभागं ते ।
मातः स्वरूपमनिशं मङ्गलसङ्गीतसौरभं वन्दे ॥ ९ ॥

மேசகமாஸேசநகம் மித்யாத்ருஷ்டாந்தமத்யபாகம் தே ।
மாதஸ் ஸ்வரூபமநிசம் மங்கலஸங்கீதஸௌரபம் வந்தே ॥ 9

मातः— தாயே! मिथ्यादृष्टान्तमध्यभागं – மித்யைக்கு (பொய்க்கு) உதாரணமாக விளங்கும் இடையை யுடையதும், आसेचनकं - எவ்வளவு தடவை பார்த்தா லும் திருப்தியைத் தராததும், मेचकं-கறுப்பானதும், मङ्गलसङ्गीतसौरभं - மஹா மங்கள ஸங்கீதத்தின் சிறந்த மணத்தை யுடையதுமான, ते - உன்னுடைய, स्वरूपं - ஸ்வரூபத்தை, अनिशं - எப்பொழுதும், वन्दे - நமஸ் கரிக்கிறேன்.

नवरत्नमाल्यमेतद्रचितं मातङ्गकन्यकाभरणम् ।
यः पठति भक्तियुक्तः स भवेद्वागीश्वरः साक्षात् ॥ १० ॥

நவரத்நமால்யமேதத் ரசிதம் மாதங்ககந்யகாபரணம் ।
யஃ படதி பக்தியுக்தஃ ஸ பவேத் வாகீச்வரஸ்ஸாக்ஷாத் ॥ 10

मातङ्गकन्यकाभरणं - மாதங்க குமாரிக்கு ஆபரண மாக, रचितं - புனையப்பட்ட, एतत् - இந்த, नवरत्नमाल्यं- நவரத்ன மாலையை, यः-எவர், भक्तियुक्तः-பக்தியோடு

கூடியவராக, पठति - படிக்கிறாரோ, सः- அவர், साक्षात् वागीश्वरः - வாகீசராகவே (வாக்குக்கு அதிபதியாக, வச்யவாக்குடையவராக), भवेत् - ஆவார்.

श्रीशङ्करभगवत्पादानुगृहीता

॥ नवरत्नमाला समाप्ता ॥

நவரத்னமாலா ஸமாப்தா.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் இயற்றிய
நவரத்ன மாலை முற்றிற்று.

---

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—60 |
| 2. | ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... .... | 0—60 |
| 3. | ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்நமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... | 0—25 |
| 4. | ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்கிருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... .... | 2—50 |
| 5. | ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும் .... .... | 0—87 |
| 6. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் .... | 2—50 |
| 7. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்கிருதத்தில் .... .... | 0—40 |
| 8. | —ஷ—தமிழில் ச்லோகமும், நாமாவளியும்.... .... | 0—30 |
| 9. | ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—87 |
| 10. | விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் .... | 0—75 |
| 11. | ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—75 |
| 12. | மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—62 |
| 13. | ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது | 1—75 |
| 14. | ஸ்ரீ துர்கா சந்த்ர கலாஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... ... | 0—50 |
| 15. | ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது .... .... .... | 0—75 |

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1